(அ-கை.) இதையே அருளிச்செய்கிறார்.

நஹிதேஹப்ருதாஶக்யம் த்யக்தும்கர்மாண்யஶேஷத:|
யஸ்துகர்மபலத்யாகீ ஸத்யாகீத்யபிதீயதே||கக||

(கக) சரீரத்தைத் தரித்திருக்கிறவரையில் கர்மங்களை முழுவதும் விடுவதென்றால் ஸாத்தியமான விஷயமன்று. [ஏன்? தேஹத்தைத் தரிப்பதற்காகப் புசித்தல் பானம்செய்தல் முதலிய கர்மங்களும் மற்றும் அதைச்சேர்ந்த கர்மங்களும் ஒழிக்கப்போகாமையாலே அதற்காக மஹாயக்ஞம் முதலிய அநுஷ்டாநமும் ஒழிக்கப்போகாது.] ஆகையால் எவனொருவன் அந்த மஹாயக்ஞம் முதலியவற்றில் பலனைக்கைவிடுகிறானோ அவனே த்யாகேநைகேநாம்ருதத்வமாநஶு: இத்தியாதி சாஸ்திரங்களில் தியாகியென்னப்படுவான்.

(அ-கை.) நல்லது, அக்நிஹோத்திரம் தரிசம் பூர்ணமாஸம் ஜியோதிஷ்டோமம் முதலியவைகளும் மஹாயக்ஞாதிகளும் சுவர்க்கம் முதலிய பலன்களோடு ஸம்பந்தித்திருப்பதாக சாஸ்திரங்களால் விதிக்கப்படுகின்றன; நித்திய நைமித்திகங்களுங்கூட ப்ரஜாபத்யம்க்ருஹஸ்தாநாம் இத்தியாதியாகப் பலனோடு ஸம்பந்தப்பட்டிருப்பதாகவேவிதிக்கப்படுகின்றன; ஆகையால் அந்தபலனைச் சாதிப்பதே ஸ்வபாவமானஅக்கர்மங்களையநுஷ்டிக்கும்பக்ஷத்தில்இவன் பலத்தைக் கோராமற்போனாலும்(விதைவிதைத்தாற்போல்)அவை இஷ்டாநிஷ்டரூபமான பலன்களைத்தந்தல்லதுமீளாவன்றோ? ஆகையால்மோக்ஷவிரோதிகளான பலன்களைத் தருகின்ற கருமத்தை மோக்ஷார்த்தி யநுஷ்டிக்கக்கடவனல்லன்; என்றுவரும் சங்கைக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்.

அநிஷ்டமிஷ்டம்மிஶ்ரம்ச த்ரிவிதம்கர்மண:பலம்|
பவத்யத்யாகிநாம்ப்ரேத்யநதுஸந்யாஸிநாம்க்வசித்||கஉ||

(கஉ) அநிஷ்டமான நரகாதிகளென்றும், இஷ்டமான சுவர்க்காதிகளென்றும், அனிஷ்டத்தோடு கலந்த புத்திரன் பசுமுதலியவைகளென்றும் கர்மத்துக்குப் பயன் மூன்றுவிதம். இந்தப்பயன் கர்த்ருத்வத்தையும் எனதென்கிற வபிமானத்தையும் கருமப்பயனையும் கைவிடாதவர்களுக்கு,கர்மாநுஷ்டாநம் செய்தவுடனே பலிக்கின்றது. கர்த்ருத்வாதிகளைவிட்டவருக்கோ ஒருக்காலும்(மோக்ஷவிரோதியான)இப்பயனுண்டாகமாட்டாது.

[இப்படி கர்மங்களைச் செய்துகொண்டு கர்திருத்வாதிகளை விடுவதுதான் சாஸ்திரஸித்தமான ஸந்நியாஸம், இதுதான் தியாகம்என்று சொல்லப்பட்டது.]

---

தைத்தரும் கர்மமாவது, தன்னாலும் அறியாமல் செய்யப்பட்ட பாபகர்மம். அதொழியாதபோது - நாவிரதோதுஶ்சரிதாந்நாஶாந்தோநாஸமாஹித: | நாஶாந்தமாநஸோவாபிப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத் என்கிறபடியே ஞானோத்பத்திக்கு விரோதமுண்டாம். ஆகையால் கர்மத்தில் கர்திருத்வாதித்தியாகம் சாஸ்திரீயத்தியாகமேயல்லது ஸ்வரூபத்தியாகமல்ல.

(அ-கை.) இப்பொழுது புருஷோத்தமனாய் அந்தரியாமியான பகவானே கர்த்தாவென்று நினைத்து தன்னைக் கர்த்தாவல்லனென்று நினைக்கும்படியை யருளிச்செய்கிறார். [இப்படிநினைத்தபோதே பலத்திலும் கர்மத்திலும் எனதென்கிற அபிமானம் ஒழிந்துபோகிறபடியால் பரமபுருஷனே தனது ஜீவனைக்கொண்டு தனது கரணகளேபரப் பிராணங்களாலே தனது லீலையென்னும் பயனுக்காகக் கர்மங்களை யாரம்பிக்கிறானாகையால் ஜீவனைச்சேர்ந்த (பசிதீருகைமுதலிய) பயனும் அதன் ஸாதநமான கர்மமும் பரமபுருஷாதீநமென்பதுதத்வம்.]

பஞ்சைதாநி மஹாபாஹோ காரணாநி நிபோத மே|
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்தயே ஸர்வகர்மணாம்|| கங||

(கங) வஸ்துவை உள்ளபடியே அறிவதான வைதிகபுத்தியால் ஏற்பட்ட ஸித்தாந்தத்தில், ஸர்வகர்மங்களையும் உண்டுபண்ணுமவைகளாகச் சொல்லப்பட்ட இந்த ஐந்துகாரணங்களும் * நம்மிடத்தினின்றும் வந்ததாக நிர்ணயிக்கப்பட்டனவென்று நினை.

(அ-கை.) அவ்வைந்துமெவையென்ன அருளிச்செய்கிறார்.

அதிஷ்டாநம் ததா கர்தா கரணம் ச ப்ருதக்விதம்|
விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம்|| கச||
ஶரீரவாங்மநோபிர்யத் கர்ம ப்ராரபதே நர:|
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ:|| கரு||

(கச-கரு) சாஸ்திரத்தில் ஸித்தமானதும் நிஷித்தமானதுமாய், சரீரம் வாக்கு மனது என்கிற முக்கரணங்களாலுஞ் செய்யப்படுமதாயுள்ள ஸகல கர்மத்துக்கும் இவ்வைந்தும் ஹேதுக்கள். எவையெனில் - (மஹாபூதங்களின் தொகையான) சரீரம், கர்த்தாவென்கிற § ஜீவாத்மா, பலவித வியாபாரங்களைச்செய்யும் (வாக்கு † முதலிய) கரணம், நாநவிதவிருத்தியையும்செய்கின்ற (பிராணம் அபாநம் வியாநம் உதாநம் ஸமாநம் என்று ஐந்துவிதமான) வாயு ஆகிய விந்நான்கும், அந்தரியாமியான பரமாத்மாவும் ஆக இவ்வை

* ய ஆத்மநி திஷ்டந்நாத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:|| அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா இத்தியாதி வாக்கியங்களால் பிறக்கும் வைதிகபுத்தியானது, சரீரம் இந்திரியம் பிராணன் ஜீவாத்மா என்னுமிவைகளை உபகரணமாகக்கொண்ட பரமாத்துமாவேதான் கர்த்தாவென்று நிர்ணயிக்கின்றது.

§ ஜீவாத்மா கர்த்தாவென்கிற விஷயம் - ஜ்ஞோऽத ஏவ, கர்தா ஶாஸ்த்ரார்த்தவத்த்வாத் என்கிற ஸூத்திரங்களில் உபபாதிக்கப்பட்டுளது.

† வாக்கு கைகள் கால்கள் ஆஸநம் உபஸ்தம் மனது என்று ஆறுவிதமானகரணமுமென்றபடி.

க்தும், கர்மம் ஸித்திக்கும் விஷயத்தில் காரணமாகின்றன. [என்றால் - சரீராதி கரணஸஹிதனாய்க்கொண்டு பரமாத்மா கர்த்தா § வாகிறானென்றபடி.]

𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌂 𑌸𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌤𑍁 𑌯𑌃 |
𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌦𑍁𑌰𑍍𑌮𑌤𑌿𑌃 ||கசு||

(கசு) இப்படி ஜீவாத்மாவுக்கு கர்திருத்வமானது, உண்மையில் பரமாத்மாவின் அனுமதியை முன்னிட்டிருக்கிறதென்று ஏற்பட்டபின்பு, அந்தந்த கர்மத்துக்கும் கேவலம் ஜீவாத்மாவே கர்த்தாவாகிறானென்று எவன் நினைக்கிறானோ அவன் துர்ப்புத்தி. ஆனதினால் அவன் வஸ்துவை உள்ளபடியறிந்தவனல்லன்.

𑌯𑌸𑍍𑌯 𑌨𑌾𑌹𑌙𑍍𑌕𑍃𑌤𑍋 𑌭𑌾𑌵𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 |
𑌹𑌤𑍍𑌵𑌾𑌽𑌪𑌿 𑌸 𑌇𑌮𑌾𑌁𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌨 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ||கஎ||

(கஎ) பரமபுருஷன் கர்த்தாவென்கிற நினைவினால் யாவனொருவன் "நான் செய்கிறேனென்று" தன்னைக் கர்த்தாவாக நினைக்கமாட்டானோ, எவனுக்கானால் "இந்தகர்மமும் இதின் பயனும் என்னைச்சேர்ந்ததல்ல" என்று கர்மத்திலும் அதின் பலத்திலும் பற்றிருக்கமாட்டானோ, அவன் போர்க்களத்தில் இந்த பீஷ்மாதிகளைப்போல் வரும்ஸகலமானபெயர்களையுங் கொன்றா

---

§ கர்திருத்வம் பரமாத்மாதீனமென்கிற விஷயம் 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚𑌾𑌹𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌪𑍋𑌹𑌨𑌞𑍍𑌚 என்றுகீழேசொல்லப்பட்டது. 𑌅𑌨𑍍𑌤𑌃𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑌾 𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 | 𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌨𑍍𑌤𑌰𑍋 𑌯𑌮𑌯𑌤𑌿 என்றுமேலும்சொல்லப்படும். ஜீவாத்மாவின் கர்திருத்வமும் பரமாத்மாதீனமென்கிற விஷயம் 𑌪𑌰𑌾𑌤𑍍𑌤𑍁 𑌤𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 என்கிற ஸூத்திரத்தில்உபபாதிக்கப்பட்டது. ஜீவாத்மாவின் கர்திருத்வம் பரமாத்மாதீனமென்றால்-ஜீவாத்மாவுக்குக் கர்மஞ்செய்வதில் பற்றில்லாமையாலே விதியும் விலக்குமான சாஸ்திரம் வியர்த்தமாகாதோவென்றால்-இந்த ஆக்ஷேபத்தை 𑌕𑍃𑌤𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌹𑌿𑌤𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌾𑌵𑍈𑌯𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑍍𑌯𑌃 என்றுஸூத்திரகாரரேபரிஹரித்தார். அதனால் என்ன ஏற்பட்டது? பகவானாலளிக்கப்பட்டு அவனை ஆதாரமாகக்கொண்டு அவனாலளிக்கப்பட்ட சக்தியுடன்கூடிய கரணகளேபராதிகளைக்கொண்டு அவனை ஆதாரமாகக்கொண்ட ஜீவாத்மாவானவன், அவனாலளிக்கப்பட்ட சக்தியுடன்கூடி தன் இச்சையினால் கரணாதிகளையும்அதிஷ்டித்துப் பிரயத்தனத்தையும் செய்கிறான்; அவனுக்குள்ளிருக்கின்ற பரமாத்மாவோ கேவலம் அனுமதிமாத்திரங் கொடுத்துக்கொண்டு பிரவர்த்திப்பிக்கிறான்; ஆகையால் பெரியதொரு கற்பாறை மரம்முதலியவைகளை, பத்துபெயர்கள் சேர்ந்து புரட்டினால் அதில்ஒவ்வொருத்தரும்ஹேதுவாய்க்கொண்டுவிதியையும்விலக்கையும்அடைவதுபோல் ஜீவாத்மாவும் தன் புத்தியைக்கொண்டுப் பிரவ்ருத்திக்கு ஹேதுவாகின்றமையால் அவன்விஷயத்தில் சாஸ்திரம்பயன்படுமென்பதாம்.

ளும் அவன் கொல்பவனுமல்ல; அந்தகர்மத்தால் அவன் கட்டுப்படவுமாட்டான். [என்றால் அதன்பயனை யநுபவிக்கமாட்டா னென்றபடி.]

(அ-கை.) இப்படி தனக்குக்கர்த்திருத்வாதிகளில்லையென்கிற நினைவெல்லாம் ஸத்துவகுணம் விருத்தியானால் மாத்திரந்தான் பிறக்கும்; ஆகையால் ஸத்துவகுணத்தைப் பற்றவேண்டும், என்று அறிவிக்கைக்காகக் கர்மத்தில் ஸத்துவம் முதலிய குணங்களால் வரும் வித்தியாஸத்தை விஸ்தரிப்பதாகத் திருவுள்ளம்பற்றி கர்மவிதியின் விதத்தை யருளிச்செய்கிறார்.

ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்மசோதநா।
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித: கர்மஸங்க்ரஹ:॥ ௧௮॥

(௧௮) செய்யவேண்டுங் கர்மத்தை யறியும் ஞானம், செய்யவேண்டுங் கர்மம், அதை யறியுமவன் என்று கர்மவிதியானது மூன்றுவிதம்; [என்றால் - அறிவு, அறியப்படுமது, அறியுமது என்று இம்மூன்றுடன் கூடியது ஜோதிஷ்டோமம் முதலிய கர்மங்களின் விதி என்றபடி.] அதில் அறியவேண்டுங் கர்மம், * கரணமென்றும் கர்மமென்றும் கர்த்தாவென்றும் மூன்றுவிதமாய் ஸங்கிரஹம் பண்ணப்பட்டிருக்கிறது.

ஜ்ஞாநம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத:।
ப்ரோச்யதே குணஸங்க்யாநே யதாவச்ச்ருணு தாந்யபி॥

(௧௯) செய்யவேண்டுங் கர்மத்தையறியும் ஞானம், செய்யப்படுங்கர்மம், அதை அநுஷ்டிப்பவன் ஆக இம்மூன்றும் ஸத்துவாதிகுணங்களுக்குத்தக்கபடி ஒவ்வொன்றும் மூன்றுபடியாயிருக்கிறதென்று குணகாரியங்களைக் கணக்கிடும் முறையில் சொல்லப்படுகிறது; அவைகளையும் உள்ளபடியே சொல்லுகிறோம் கேள்.

ஸர்வபூதேஷு யேநைகம் பாவமவ்யயமீக்ஷதே।
அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ஸாத்த்விகம்॥ ௨0॥

(௨0) பிராம்மணனென்றும் க்ஷத்திரியனென்றும், பிரம்மசாரியென்றும் கிரஹஸ்த்தனென்றும் இப்படி நாநாவிதமாய்ப் பிரிக்கப்பட்டு கர்மாதிகாரிகளாயிருக்கின்ற ஸகலபூதங்களிலும் 'ஆத்மாவென்னும் ஸாவபதார்த்தம், பிராம்மணாதி பேதங்களுக்குத்தக்கபடி பிரிக்கப்படாமல் ஞானமே வடிவாயும் அழிவற்றதாயும் பலனைப்பெறுவதற்குத் தகாததாயும் இருக்கிறதென்று, எந்த ஞானமானால் கர்மஞ்செய்யும்பொழுதே யறியுமோ அது ஸாத்துவிகக் ஞானமெனப்படும்.

ப்ருதக்த்வேந து யஜ்ஜ்ஞாநம் நாநாபாவாந் ப்ருதக்விதாந்।
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ராஜஸம்॥ ௨௧॥

---

* கரணம்-ஸாதகமான திரவ்யம் முதலியன. கர்மம்-யோக முதலியன. கர்த்தா - அநுஷ்டிப்பவன்.

(௨௧) பிராம்மணன் முதலான ஸகல பூதங்களும் பிராம்மணாதிபேதங்களாலே பிரிக்கப்பட்டிருப்பதுபோல அவற்றிலுள்ள ஆத்மாக்களும் வெவ்வேருகப் பிரிக்கப்பட்டு பலனை யநுபவிப்பதற்கு யோக்கியங்களாக விருக்கின்றனவென்று எந்த ஞானமானுல் கருமாநுஷ்டானவேளையில் அறியுமோ அந்தக்ஞானம் ராஜஸக்ஞானமென்னப்படும்.

யத்து க்ருத்ஸ்நவதேகஸ்மிந் கார்யே ஸக்தமஹைதுகம்।
அதத்வார்த்தவதல்பஞ்ச தத்தாமஸமுதாஹ்ருதம்॥௨௨॥

(௨௨) எந்த ஞானமானுல் மிகவும் அற்பபலன்களைத்தரவல்ல பிரேதம் பூதம் முதலியவைகளை யாராதிப்பதற்காகச் செய்யுங் கருமத்தை நம்பிக்கொண்டு இதுவே ஸகல பலன்களையுங் கொடுக்குமென்று பற்றிக்கிடக்குமோ, அந்த பொய்யறிவைத் தாமஸக்ஞானமென்பர்கள் பெரியோர்.

(அ-கை.) இவ்வாறு செய்யவேண்டுங் கருமத்தை யறியும் ஞானமானது கர்மாதிகாரியின் அம்சத்துக்குத்தக்கபடி மூவகையென்று அருளிச்செய்து, செய்யப்படுங் கருமமும் குணத்துக்குத்தக்கபடி மூன்றுவிதமென்பதை யருளிச்செய்கிருர்.

நியதம் ஸங்கரஹிதமராகத்வேஷத꞉ க்ருதம்।
அபலப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்விகமுச்யதே॥௨௩॥

(௨௩) தன் வருணுச்சிரமங்களுக்குத்தக்கபடி நான் செய்தேனென்கிற அபிமானமில்லாமலும், (தனக்குக் கீர்த்தியுண்டாகவேண்டுமென்கிற) ஆசையாலாவது (பிறருக்குண்டான கீர்த்தியில்) துவேஷத்தாலாவது செய்யப்படாமலும், இது பலாபேக்ஷையின்றிச் செய்யவேண்டுவதென்றே செய்யப்படுங் கருமம் ஸாத்துவிகமென்னப்படும்.

யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புந꞉।
க்ரியதே பஹுலாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம்॥௨௪॥

(௨௪) எந்த கருமமானுல் பலத்தை யடையவேண்டுமென்று அஹங்காரத்தோடுகூடி நான் செய்கிறேனென்கிற அபிமானத்தோடு வெகுசாய் சிரமப்பட்டுச் செய்யப்படுமோ அது ராஜஸம். [என்ருல், வெகு கஷ்டமாயிருக்கிற இந்த வேலை யென்னுல் செய்யப்படுகிறது என்கிற அபிமானத்தோடு செய்யப்படுங் கர்மம் ராஜஸமென்னப்படுமென்றபடி.]

அநுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமநபேக்ஷ்ய ச பௌருஷம்।
மோஹாதாரப்யதே கர்ம யத்தத்தாமஸமுச்யதே॥௨௫॥

(௨௫) கர்மஞ்செய்யும்பொழுது உண்டாகும் துயரத்தையும் பணச்சிலவையும் பிராணி ஹிம்ஸையையும் கருமத்தை முடிக்கும்படியான ஸாமர்த்தியத்தையும் ஒன்றையும் பாராமல், பரமபுருஷன் செய்கிருனென்கிற ஞானமுமில்லாமல் எந்த கருமம் ஆரம்பிக்கப்படுமோ அது தாமஸமென்னப்படும்.

[இப்படி வேதங்களுக்கும் வைதிகங்களான யக்ஞாதிகளுக்கும் ஓம் என்னும் சப்தத்தோடு அந்வயம் சொல்லப்பட்டது. இதனால் ஓம் என்கிற சொல்லோடுகூடிய வேதத்தைத்தரிப்பதாலும் அப்படிப்பட்ட யக்ஞாதிகர்மங்களைச் செய்கையாலும் பிராம்மணசப்தத்தாலே குறிக்கப்பட்ட திரைவர்ணிகருக்கும் ஓம் என்னும் சொல்லோடு அந்வயம் வருணிக்கப்பட்டதாகிறது.

(அ-கை.) இப்பொழுது இவைகளுக்கெல்லாம் தத் என்னுஞ் சொல்லோடு அந்வயங் கூறப்படுகின்றது.

𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑌨𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌾𑌯 𑌫𑌲𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃।
𑌦𑌾𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑍋𑌕𑍍𑌷𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 ॥௨௫॥

(௨௫) பலனைக்கோராமல் வேதாப்பியாஸம் யக்ஞம் தவம் தானம் முதலிய கிரியைகள் எவைகளானல் மோக்ஷாபேக்ஷிகளான திரைவர்ணிகர்களாலே செய்யப்படுமோ அவைகள் பிரம்மப்பிராப்திக்கு உபாயமாகும்படி பிரம்மவாசகமான † தத்சப்தத்தாலே குறிக்கத்தக்கவைகள்.

(அ - கை.) இப்படி வேதாத்தியயநம் யக்ஞம் முதலியவைகள் மோக்ஷத்துக்கு ஸாதநமாகும்பொழுது தத் என்னுஞ் சொல்லாலே கூறப்படுமென்று தத் என்னுஞ் சொல்லுக்கு அந்வயம் சொல்லப்பட்டது. திரைவர்ணிகரும் அப்படிப்பட்ட வேதாத்திய யநாதிகளை யநுஷ்டிக்கின்றமையால் அவர்களுக்கும் தத்சப்தத்தோடு அந்வயமுண்டென்றுஏர்ப்பட்டது. இப்பொழுது இவைகளுக்கெல்லாம் ஸத்சப்தத்தோடு அந்வயம் சொல்வதற்காக, உலகத்தில் ஸத்என்னுஞ்சொல்லுக்குப்பொருள்வழங்கும்படி யருளிச்செய்கிறார்.

𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇 𑌸𑌾𑌧𑍁𑌭𑌾𑌵𑍇 𑌚 𑌸𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇।
𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌤𑌥𑌾 𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇॥௨௬॥

(௨௬) அஹோபார்த்த! ‘ஸத்’ என்னும்சொல் லோகத்திலாகட்டும் வேதத்திலாகட்டும் இருக்குந்தன்மையிலும் ஸாதுத்தன்மையிலும் பிரயோகிக்கப்படுகின்றது. அப்படியே ஒரு புருஷனுல் அநுஷ்டிக்கப்பட்ட லௌகிகமான நல்லகாரியங்களிலும் ‘இது ஸத்கர்மம்’ என்றுபிரயோகிக்கப்படுகிறது.

𑌯𑌜𑍍𑌞𑍇 𑌤𑌪𑌸𑌿 𑌦𑌾𑌨𑍇 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 𑌸𑌦𑌿𑌤𑌿 𑌚𑍋𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌕𑌰𑍍𑌮 𑌚𑍈𑌵 𑌤𑌦𑌰𑍍𑌥𑍀𑌯𑌂 𑌸𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌾𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇॥௨௭॥

(௨௭) ஆகையால் வைதிகர்களான திரைவர்ணிகர்கள் யக்ஞதாநதவங்களில் இருப்பார்களில் அவ்விருப்பு நன்ருகையாலே ஸத் என்னப்படும்; அப்படிப்பட்ட திரைவர்ணிகர்களுக்காகச் செய்யப்படும் யக்ஞாதிகருமங்களும் ஸத் என்றேசொல்லப்படும். [ஆகையால் வேதங்களும் வேதிகக்கருமங்களும்

† 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌕𑌨𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 என்று தத் சப்தம் பிரம்மவாசகமென்றுமிடம் ஸஹஸ்ரநாமாதிகளில் பிரஸித்தம்.

(௨௯) (பகுத்தறிவோடுகூடிய நிச்சயஞானமான) புத்திக்கும் (ஆரம்பித்த வேலையை விக்கினம் நேரிட்டாலும் கைவிடாமலிருப்பதென்கிற) தைரியத்துக்கும் (ஸத்துவம் முதலிய குணங்களுக்குத்தக்கபடி) உண்டான மூன்று பேதத்தையும் தனித்தனியே உள்ளபடியே சொல்லுகிறேம் கேள்.

𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌞𑍍𑌚 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌞𑍍𑌚 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑍇 𑌭𑌯𑌾𑌭𑌯𑍇।
𑌬𑌨𑍍𑌧𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌞𑍍𑌚 𑌯𑌾 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀॥௩௦॥

(௩௦) (க்ஷேமத்துக்குஸாதகமான) பிரவ்ருத்தியையும், (மோக்ஷத்துக்கு ஸாதகமான) நிவ்ருத்தியையும் எந்த புத்தியாலறியுமோ,(பிரவிருத்தி தர்மமோ நிவ்ருத்திதர்மமோ இவ்விரண்டிலொன்றைக் கைப்பற்றி யநுஷ்டிக்குமவர்களான) ஸர்வவருணத்தாரும்காலதேசவர்த்தமானங்களுக்குத் தக்கபடி இதைச்செய்யத்தகும் இதைச் செய்யத்தகாது என்று எந்தபுத்தியாலறியுமோ, (சாஸ்திரத்தைக்கடந்தால்) பயமென்பதையும் (சாஸ்திரத்தைப் பின் சென்றால்) அபயமென்பதையும் ஸம்ஸாரத்தின் உண்மையையும் அதையொழிக்குமதான மோக்ஷத்தின் உண்மையையும் எந்த புத்தியாலறியுமோ, அது ஸாத்துவிக புத்தியென்னப்படும்.

𑌯𑌯𑌾 𑌧𑌰𑍍𑌮𑌮𑌧𑌰𑍍𑌮𑌞𑍍𑌚 𑌕𑌾𑌰𑍍𑌯𑌞𑍍𑌚𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚।
𑌅𑌯𑌥𑌾𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌰𑌾𑌜𑌸𑍀॥௩௧॥

(௩௧) முன் சொன்ன இருவகைத்தருமத்தையும் அதின் விபரீதத்தையும் அதில் நிஷ்டையுடையவர்கள் தேசகாலங்களுக்குத்தக்கபடி செய்யவேண்டுங் காரியத்தையும் ஒழிக்கவேண்டுங் காரியத்தையும் உள்ளபடியே யறியமாட்டாத புத்தியை ராஜஸபுத்தியென்கிறது.

𑌅𑌧𑌰𑍍𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑌮𑌿𑌤𑌿 𑌯𑌾 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌤𑌮𑌸𑌾𑌵𑍃𑌤𑌾।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌂𑌶𑍍𑌚 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌤𑌾𑌮𑌸𑍀॥ ௩௨॥

(௩௨) தாமஸபுத்தியோ தமோகுணத்தால் சூழப்பட்டதாய் எல்லாப் பொருளையும் விபரீதமாய்க் காண்பதாம். [என்றால் தருமத்தை அதருமமாயும், அதருமத்தைத் தருமமாயும், ஸத்தை அஸத்தாயும், அஸத்தை ஸத்தாயும், பரமான தத்துவத்தை அவரமாயும், அவரமான தத்துவத்தைப் பரமாயும் இப்படி எல்லாவற்றையும் வித்தியாஸமாகவே பார்க்குமென்றபடி.]

𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌯𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃।
𑌯𑍋𑌗𑍇𑌨𑌾𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌿𑌸𑍍𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀॥௩௩॥

(௩௩) மோக்ஷோபாயமாக எம்பெருமானை உபாஸிப்பதென்கிற யோகத்தை உத்தேசித்துப் பிரவர்த்தித்த மனம், பிராணன், இந்திரியம் முதலியவைகளின்வியாபாரங்களையெல்லாம் எந்ததைரியமாலல் சலிக்காமல் நிலைப்பிக்குமோ அது ஸாத்துவிகத்தைரிய மென்னப்படும்.

யயா து த⁴ர்மகாமார்தா²ந் த்⁴ருத்யா தா⁴ரயதேऽர்ஜுந|
ப்ரஸங்கே³ந ப²லாகாங்க்ஷீ த்⁴ருதி꞉ ஸா பார்த² ராஜஸீ||௩௪||

(௩௪) தருமம் காமம் அர்த்தம் இவைகளை யபேக்ஷித்துச்செய்யும் மனம் முதலியவைகளின் செயல்களை யெந்த தைரியமானால் தரிக்குமோ அது ராஜஸத்தைரியமென்னப்படும்.

யயா ஸ்வப்நம் ப⁴யம் ஶோகம் விஷாத³ம் மத³மேவ ச|
ந விமுஞ்சதி து³ர்மேதா⁴ த்⁴ருதி꞉ ஸா பார்த² தாமஸீ||௩௫||

(௩௫) நித்திரையையும் விஷயங்களை யநுபவிப்பதாலுண்டாகும் மதத்தையும் உத்தேசித்துவரும் பயம், சோகம், துக்கம் இவைகளைத்தரும்படியான மனமுதலியவைகளின் செயல்களைக்கெடுமதியானவன் எந்தத்தைரியத்தைக்கொண்டு தரிக்கிறானே அது தாமஸத்தைரிய மென்னப்படும்.

ஸுக²ம் த்விதா³நீம் த்ரிவித⁴ம் ஶ்ருணு மே ப⁴ரதர்ஷப⁴|

(௩௫உ) முன்சொன்ன ஞாநம், கருமம், கர்த்தாமுதலிய வெல்லாம் எந்தசுகத்துச்கு சேஷப்பட்டிருக்குமோ அந்தசுகமும் குணத்துக்குத்தக்கபடி மூன்றுவிதமென்கிற விஷயத்தை யிப்பொழுது சொல்லுகிறேன்கேள்.

அப்⁴யாஸாத்³ ரமதே யத்ர து³꞉கா²ந்தம் ச நிக³ச்ச²தி||௩௬||
யத்தத³க்³ரே விஷமிவ பரிணாமேऽம்ருதோபமம்|
தத்ஸுக²ம் ஸாத்த்விகம் ப்ரோக்தமாத்மபு³த்³தி⁴ப்ரஸாத³ஜம்||௩௭||

(௩௬-௩௭) எந்த சுகத்தையானால் வெகுகாலம் அப்பியஸித்து வந்து மெள்ளமெள்ள ஈடில்லாதசுகத்தை யநுபவித்து ஸம்ஸாரத்தால் வருந்துயரங்களையெல்லாம் மனமுமில்லாமல் ஒழிக்கிறானே, எந்தச்சுகமானால் (யோகஞ்செய்யத்தொடங்கும்பொழுது மிகவும் வருத்தப்பட்டு ஸாதிக்கவேண்டுகையாலும் தனியான ஆத்மஸ்வரூபம் முன்னேபழகாமையாலும்) முதலில் துக்கம்போலவிருந்து, பிறகு (அப்பியாஸத்தின் வலிமையாலே ஏகாந்தமான ஸ்வரூபத்தையடைவதால்) அமுதத்துக்குச்சமமாயிருக்குமோ, (இதர விஷயங்களை யொழித்து ஏகாந்தமான ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பதாலுண்டாகின்ற) அந்த சுகமானது ஸாத்விகச்சுகமென்னப்படும்.

விஷயேந்த்³ரியஸம்யோகா³த்³யத்தத³க்³ரேऽம்ருதோபமம்|
பரிணாமே விஷமிவ தத்ஸுக²ம் ராஜஸம் ஸ்ம்ருதம்||௩௮||

(௩௮) எந்தச்சுகமானால் அநுபவிக்கும்பொழுது இந்திரியத்துக்கும் விஷயத்துக்குமுண்டான சேர்க்கையினால் அமுதம்போலவிருந்து, அதற்கு ஹேதுவான பசிமுதலியவை தணிந்த பிறகு (அது நரகத்துக்குக் காரணமாகின்றமைகொண்டு) விஷபானம் பண்ணினப்போலிருக்குமோ அந்தசுகம் ராஜஸமென்னப்படும்.

𑌯𑌦𑌗𑍍𑌰𑍇 𑌚𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑍇 𑌚 𑌸𑍁𑌖𑌂 𑌮𑍋𑌹𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌲𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍋𑌤𑍍𑌥𑌂 𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥௩௯॥

(௩௯) எந்த சுகமானுல் (* நித்திரை § ஆலஸ்யம் † பிரமாதம் இவை களாலுண்டாய்) அநுபவிக்கும்பொழுதும் பக்குவமாகும் பொழுதும் ஆத்ம ஸ்வரூபத்தை யறியவொட்டாமல் மோஹத்தைவிளைவிக்குமோ அந்தசுகம் தாமஸமென்னப்படும்.

[ஆகையால் மோக்ஷகாமன் ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும் தலையடக்கி ஸத்துவத்தையே கைப்பற்றக்கடவனென்றதாயிற்று.]

𑌨 𑌤𑌦𑌸𑍍𑌤𑌿 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂 𑌵𑌾 𑌦𑌿𑌵𑌿 𑌦𑍇𑌵𑍇𑌷𑍁 𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 ।
𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌯𑌦𑍇𑌭𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ॥

(௪௦) பூமியில் மநுஷ்யாளிலாவது ஆகாசத்தில் தேவர்களிலாவது (பிரகிருதியுடன்கலந்து பிரமன்முதல் தாவரமீருயுள்ள) ஸகலப்பிராணிகளி லும் இந்தப்பிரகிருதியினது முக்குணங்களையுங் கடந்தப்பிராணி ஒன்ருகிலுங் கிடையாது.

(அ-கை.) ஆகவிப்படி 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇𑌨𑍈𑌕𑍇 𑌽𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌾𑌨𑌶𑍁𑌃 இத்தி யாதிகளில் மோக்ஷத்துக்கு ஸாதகமாகச்சொல்லப்பட்ட 𑌤𑍍𑌯𑌾𑌗மானது 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸 சப்தத்தின் பொருளைக்காட்டிலும் வேறுபட்டதல்லவென்றும், அதுவும் கருமஞ்செய்யும்பொழுது 'நான் கர்த்தாவல்லே' னென்கிற கர்திருத் வத்தியாகாநுஸந்தாநத்தால் வருமதென்றும், பலத்தியாகமும் கருமத்தியாக மும் கர்திருத்வத்தியாகமும் பரமபுரஷனேகர்த்தாவென்கிற நினைவினுல் வரு மதென்றும் அருளிச்செய்யப்பட்டு, இதெல்லாம் ஸத்துவகுணம் விருத்திய டைவதால் வரத்தக்கதாகையாலே ஸத்துவகுணத்தைக் கைப்பற்ற வேண்டு மென்பதை யறிவிக்கைக்காக ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களின் காரியவித்தியா ஸங்கள் இவையென்று பரக்கவருளிச்செய்யப்பட்டன.

இப்பொழுது மோக்ஷஸாதநமாகச்செய்யப்படு மிக்கருமம் பரமபுரு ஷனுடைய ஆராதந ரூபமென்கிற விஷயத்தையும், அப்படி யநுஷ்டிக்கப் படுங்கருமத்துக்கு அவனை யடைவதுதான் பலனென்கிற விஷயத்தையும் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, பிராம்மணுதி அதிகாரிகளுக்கு அவ ரவர் ஸ்வபாவத்தைச்சேர்ந்த ஸத்துவம் முதலிய குணபேதங்களுக்குத்தக்க

* நித்திரையானது, அநுபவிக்கிறகாலத்தில்கூட விஷயத்தைத் தெளி வாய் அறியவொட்டாமல் செய்கிறதென்கிற அதின் மோஹநஸாமர்த்தியம் யாவராலும் நன்கு அறியப்படும்.

§ ஆலஸ்யமாவது-இந்திரியங்கள் செயல்தீர்ந்திருக்கை; இந்திரியங்கள் செயல் தீர்ந்தால் ஞாநம் மந்தப்படவேபடும்.

† பிரமாதமாவது - செய்யவேண்டியதில் கவனமில்லாமை இதற்கும் அப்படி அக்ஞாநத்தை யுண்டாக்கும்படியான ஸ்வபாவமுண்டு.

படிபிரிக்கப்பட்டு அவரவர் விருத்தியோடு சேர்த்துச் செய்யவேண்டியதாயிருக்கிற ! கர்மஸ்வரூபத்தை யருளிச்செய்கிறார். [விருத்தியாவது ஜீவனத்தொழில்.]

ப்³ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்³ராணாம் ச பரந்தப।
கர்மாணி ப்ரவிப⁴க்தானி ஸ்வபா⁴வப்ரப⁴வைர்கு³ணை:॥௪௧॥

(௪௧) அஹோபரந்தப! பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் நால்வருக்கும் தங்கள் தங்கள் பழையவினையின்படி ‡ ஸ்வபாவமாயுண்டான ஸத்துவம் முதலிய குணங்களுக்குத்தக்கபடி செய்யவேண்டுங் கருமங்களும்விருத்திகளும் இவை இவையென்று சாஸ்த்திரங்கள் பிரித்தோதுகின்றன.

ஶமோ த³மஸ்தப: ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச।
ஜ்ஞானம் விஜ்ஞானமாஸ்திக்யம் ப்³ராஹ்மம் கர்ம ஸ்வபா⁴வஜம்॥௪௨॥

(௪௨) (புறக்கரணங்களையடக்குவதென்கிற) சமம், (அந்தக்கரணங்களை யடக்குவதென்கிற) தமம், (போகத்தையடக்கும்படி சாஸ்த்திரத்திலேற்பட்டகாயக்லேசமென்னும்) தவம், (சாஸ்திரோக்தமான கருமத்தைச்செய்யும்படியான யோக்கியதையென்கிற) சௌசம், (பிறரால் தான் பீடிக்கப்பட்டாலும் சித்தவிகாரமடையாமலிருக்கையென்கிற) க்ஷாந்தி, (பிறர்விஷயத்தில் மனதில் நினைத்தபடியே வெளியிலும்நடக்கையென்கிற) ஆர்ஜவம், (பரதத்துவத்தையும் அவரதத்துவத்தையும் பகுத்தறிவுமறிவான) ஞானம், (பரதத்துவத்திற்கே உரியவைகளான விசேஷங்களை யறிவதென்கிற) விக்ஞானம், (வேதத்தில் சொன்ன அர்த்தமெல்லாம் ஸத்தியமென்கிற உத்தம நிச்சயமான) * ஆஸ்திக்கியம், இதெல்லாம் பிராம்மணனுக்கு ஸ்வபாவமாயுண்டானகருமங்கள்.

---

‡ பிராம்மணனுக்கு ஸ்வபாவத்தாலுண்டானது, ரஜஸ்ஸையும் தமஸ்ஸையுமடக்கித் தலையெடுத்திருக்கும் ஸத்துவகுணம். க்ஷத்திரியனுக்கு ஸ்வபாவத்தாலுண்டானது, தமஸ்ஸையும் ஸத்துவத்தையுமடக்கித் தலையெடுத்திருக்கும் ரஜோகுணம். வைசியனுக்கு ஸ்வபாவத்தாலுண்டானது, ஸத்துவத்தையும் ரஜஸ்ஸையுமடக்கிக்கொஞ்சந்தலையெடுத்திருக்கும் தமோகுணம். சூத்திரனுக்கு ஸ்வபாவத்தாலுண்டானது, ரஜஸ்ஸையும் ஸத்துவத்தையுமடக்கி மிகவும் தலையெடுத்திருக்கும் தமோகுணம் என்றறிக.

* ஆஸ்திக்யமாவது-புருஷோத்தமனாயிருக்கிற பகவானான வாசுதேவனே, பரப்பிரம்மமென்னுஞ் சொல்லுக்குப் பொருளாய், ஸகலதோஷங்களுமற்று ஸ்வபாவஸித்தங்களாய் எல்லையில்லாவதிசயம்பொருந்தியவைகளாயுள்ள ஞானம் சக்தி முதலிய வெண்ணிறந்த கல்யாணகுணத்தொகையுடையனாய், ஸகலவேதாந்தங்களாலு மறியப்படுமவனாயெழுந்தருளியிருக்கிறான்; அவனே ஸகல ஜகத்துக்கும் முக்கியகாரணம்; ஸகல ஜகத்துக்கும் ஆதாரம்; ஸகலத்தையும் அவனே ஏவுகிறான்; வைதிகமான ஸகலகருமமும் அவனுடைய ஆராதநம். அவனே அந்த கருமங்களால் ஆராதிக்கப்பட்டவனாய்க்கொண்டு தரு

ஶௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயநம் ।
தாநமீஶ்வரபாவஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥ ௪௩ ॥

(௪௩) யுத்தத்தில் நிர்ப்பயமாய்ப் பிரவேசிக்கும்படியான ஸாமர்த்தியம், சத்துருக்களால் வெல்லப்போகாமை, எடுத்தகாரியத்தைத்தடைநேரிட்டபோதிலுந்தலைக்கட்டுவிக்கும் திறமை, எந்தவேலையானாலும் செய்யும்படியான ஸாமர்த்தியம், யுத்தத்தில் தனக்கு மரணம் நேரிடுமென்கிற நிச்சயமுண்டானாலுந்திரும்பாமை, தன் ஸொத்தைப்பிறர்ஸொத்தாகும்படி கொடுப்பது, தன்னையொழிந்த மற்றஜனங்களையெல்லாம் ஆளும்படியான ஸாமர்த்தியம், இதெல்லாம் க்ஷத்திரியனுக்கு ஸ்வபாவத்தாலுண்டான கருமம்.

க்ருஷிகௌரக்ஷ்யவாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபாவஜம் ।

(௪௪ ஐ) பயிர்த்தொழில், பசுக்களைக்காத்தல், பொருள் சேர்ப்பதற்குக் காரணமான விற்பனைவகைமுதற்றொழில், இது வைசியனுக்கு ஸ்பாவத்தாலுண்டானகருமம்.

பரிசர்யாத்மகம் கர்ம ஶூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥ ௪௪ ॥

(௪௪) முற்கூறிய மூன்றுவருணத்தாருக்கும் ஊழியஞ்செய்வது சூத்திரனுக்கு ஸ்வபாவமாயுண்டானகருமம்.

[இப்படிச்சொன்னதனால் நான்குவருணத்தாருக்கும் ஜீவனத்தொழிலும் செய்யவேண்டுங்கர்மங்களும் சொல்லப்பட்டனவென்றறியவும் இதில் முதல் மூன்றுவருணத்தாருக்கும் யக்ஞம் முதலியகருமங்கள்பொதுவானவை சமம்முதலிய குணங்களோ மோக்ஷார்த்திகளான மூன்று வருணத்தாருக்கும் ஸாதாரணம். பிராம்மணனுக்கு ஸத்துவம் விஞ்சியிருக்கை ஸ்வபாவமாகையாலே சமதமாதிகுணங்கள் வருத்தமின்றிவரக்கூடுமென்று அவைகளையவனுக்கு ஸ்வபாவத்தாலுண்டான தருமங்களென்றது. க்ஷத்திரியனுக்கும் வைசியனுக்கும் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் பிரதானமாகையாலே சமதமாதிகள் உண்டாவது வருத்தமென்று அவைகளை அவர்களுக்குக் கருமமாகச்சொல்லவில்லை. பிராம்மணனுக்கு யாகஞ்செய்வித்தல் ஓதுவித்தல், தானம்வாங்கல் இவை ஜீவனத்தொழில். க்ஷத்திரியனுக்கோ ஜனங்களைக்காப்பது. வைசியனுக்

மம் அர்த்தம் காமம் மோக்ஷமென்கிற பலன்களை யளிக்கிறான்; என்கிற இவ்விஷயம் ஸத்தியம் என்கிற நிச்சயந்தான். வேதேஷு ஸர்வேஷு ஶாஸ்த்ரேஷு வேதாந்தேஷு ச ஸர்வஶ: ॥ ஸர்வம் ஸர்வகரம் ப்ராஹுர் வேதாந்த ஸர்வம் ப்ரவர்த்ததே । ஸர்வம் ப்ரவர்த்தகம் தஸ்ய ॥ ஜ்ஞாநயோகம் ஜ்ஞாநாநாம்...... ஜ்ஞாநம் ஸாக்ஷிணீ ஶ்ருதி ॥ உத்தமோ தாநோ நாநாத்மாத்ரிஷு ஶ்ருதிஷு ॥ யத: ப்ரவ்ருத்திர்பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம் । ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ: ॥ யோ மாமஜமநாதிம் ச வேத்தி லோகமஹேஶ்வரம் என்றன்றோ சொல்லப்படுகிறது?

கோ முன்சொன்னபடி பயிர் செய்வது. சூத்திரனுக்கோ செய்யவேண்டுங் கருமமும் ஜீவனத்தொழிலும் இரண்டும் ஊழியஞ்செய்வதுதான்.]

𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌰𑌤𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃।
𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌰𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑌥𑌾 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌤𑌚𑍍𑌛𑍃𑌣𑍁॥ ௪௫॥

(௪௫) புருஷன் தாந்தன்கருமத்தில் விடாமல் ஊன்றியிருக்குமாகில் பரமபதத்தைப்பெறுவான். எப்படியெனில்-சொல்லுகிறேம் கேள்.

𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍।
𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌤𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃॥ ௪௬॥

(௪௬) பிராணிகளின் உத்பத்தி முதலியப்பிரவ்ருத்திகள் யாரிடத்தினின்று முண்டாகின்றனவோ, இவை யாவையும் எவனால் வியாபிக்கப்பட்டுள வோ, இந்திராதிதேவதைகளுக்கு அந்தராத்மாவாய் பரம புருஷனாயிருக்கு மந்தநம்மை யாராதித்து, மனிதன் நமது அநுக்கிரஹத்தால் நம்மை யடைவ தென்கிற ஸித்தியைப்பெறுவான்.

[நம்மிடத்தினின்றுந்தான் ஸமஸ்தமுமுண்டாகின்றது, நம்மாலே வியாபிக்கப்பட்டிருக்கிறது என்கிற விஷயம் முன்னமே சொல்லப்பட்டது. எங்கே? 𑌅𑌹𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌪𑍍𑌰𑌳𑌯𑌸𑍍𑌤𑌥𑌾। 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌪𑌰𑌤𑌰𑌂 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌸𑍍𑌤𑌿 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯॥ 𑌮𑌯𑌾 𑌤𑌤𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑌗𑌦𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾। 𑌮𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌸𑍂𑌯𑌤𑍇 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍॥ 𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌮𑌤𑍍𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 இத்யாதிகளில் சொல்லவில்லையா?]

𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍋 𑌵𑌿𑌗𑍁𑌣𑌃 𑌪𑌰𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌤𑍍।

(௪௬௨) பிரகிருதியோடு கலந்த புருஷனுக்கு இந்திரிய வியாபாரரூபமான கர்மயோகமென்னுந் தருமத்தைச்செய்வது சுலபம்; ஆகையால் தன் தருமமான கருமயோகம் குணமற்றதேயானாலும், இந்திரியஜயம் பண்ணவல்ல புருஷனுடைய தருமமான ஞாநயோகத்தைத் தானேற்றிட்டுக் கொண்டு அதை நன்கு அநுட்டிப்பதைக்காட்டிலும் இது சிறந்தது. [ஏனெனில், ஞாநயோகத்தை ஒருக்கால் குறைவற வநுஷ்டித்தாலும் ஸசலமான இந்திரியங்களையுமடக்கவேண்டுகையாலே ஒருகால மில்லாவிடில் ஒருகாலத்தில் அது இவனுக்குப் பிரமாதத்தை விளைவிக்குமென்று திருவுள்ளம்.]

(அ-கை.) அதையே உபபாதிக்கிறார்.

𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌨𑌿𑌯𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍍॥ ௪௭॥

(௪௭) பிரகிருதியைச்சேர்ந்த புருஷனுக்குக் கருமயோகம் இந்திரிய வியாபாரரூபமாயிருக்கையாலே ஸ்வபாவமாயிருக்கிறது. ஆகையால்அதைச்செய்வதா லிவனுக்கு யாதொரு கெடுதியும் நேரிடமாட்டாது, ஞாநயோ

கமோ இந்திரியங்களை யடக்கிச் சாதிக்கவேண்டுகையாலே அந்த நிஷ்டையுள்ளவனுக்குப் பிரமாதமாய் பாவம் நேரிடவே நேரிடும்.

(அ - கை.) ஆகையால் கருமநிஷ்டையேசிறந்ததென்று மூன்றும் அத்தியாயத்தில் அருளிச்செய்தவிஷயத்தை இங்கேநினைப்பூட்டுகிறார்.

𑌸𑌹𑌜𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌸𑌦𑍋𑌷𑌮𑌪𑌿 𑌨 𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌾 𑌹𑌿 𑌦𑍋𑌷𑍇𑌣 𑌧𑍂𑌮𑍇𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌵𑌾𑌵𑍃𑌤𑌾𑌃॥௪௮॥

(௪௮) ஸஹஜமாய் வருத்தமின்றி செய்யக்கூடியகருமம் துக்கத்தோடுகூடியிருந்ததேயாகிலும் அதைக்கைவிடலாகாது. [என்றால், ஞானயோகத்துக்குத்தக்கவனாயினும் கருமயோகத்தையே செய்யென்றபடி] ஏனெனில்-கருமயோகமோ ஞானயோகமோ எதைச்செய்யத்தொடங்கினாலும் எல்லாம் புகையால் சூழப்பட்ட நெருப்புபோல துக்கத்தோடுகூடியே யிருக்கின்றன. [ஆனால் அவ்விரண்டுக்கும் இதுதான் விசேஷம். எது ? கருமயோகம் சுலபமாய் செய்யக்கூடியதாயும் பிரமாதத்தை யுண்டுபண்ணாததாயுமிருக்குமென்பதும் ஞானயோகம் அதற்கெதிராயிருக்கும் என்பதுமாம்]

𑌅𑌸𑌕𑍍𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃।
𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿॥௪௯॥

(௪௯) பலன்முதலியவைகளில் ஆசைவையாமல் மனதை ஜயித்து பரமபுருஷனே கர்த்தாவென்பதைச்சிந்திப்பதால் தான் கர்த்தாவென்கிற நினைவைமாற்றி இப்படிப்பட்ட ஸந்நியாஸத்தோடு கூடியிருப்பவன், கருமத்தை யநுட்டித்துவந்தேஞானயோகத்தின்பயனானத்தியாநநிஷ்டையையடைவான்.

[என்றால் ஸகல இந்திரியங்களும் சாந்தமாய்ச்செய்ய வேண்டியதான தியாநயோகத்தை யடைவானென்றபடி.]

𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋 𑌯𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌥𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌿𑌬𑍋𑌧 𑌮𑍇।
𑌸𑌮𑌾𑌸𑍇𑌨𑍈𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾॥௫௦॥

(௫௦) பிரயாண மாமளவும் நாடோறும் அநுட்டிக்கப்படுங்கருமயோகத்தால் ஒத்தாசைபண்ணபட்ட ஞானயோகம் ஸித்திக்கப்பெற்றவன், எந்தப் பிரகாரமிருந்து(தியாநயோகத்துக்குப்பயனான) பிரம்மத்தை யடைகிறானோ அதைச்சுருக்கமாய்ச்சொல்லுகிறேன்கேள்.

𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌚।
𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 𑌵𑍍𑌯𑍁𑌦𑌸𑍍𑌯 𑌚॥௫௧॥
𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌸𑍇𑌵𑍀 𑌲𑌘𑍍𑌵𑌾𑌶𑍀 𑌯𑌤𑌵𑌾𑌕𑍍𑌕𑌾𑌯𑌮𑌾𑌨𑌸𑌃।
𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑌪𑌰𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌸𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃॥ ॥
𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂 𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍।
𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌯𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇॥௫௩॥

(௫௧-௫௨-௫௩) ஆத்மாவை யுள்ளபடியே யறிகின்ற புத்தியுடன்கூடியிருந்து விஷயங்களினின்று மனதைத்திருப்பி யோகத்துக்கு யோக்கியமாம்படிபண்ணி, சப்தாதி விஷயங்களைக்கிட்டவொட்டாமல்துறந்து, அவற்றிற்குக்காரணமான ராகத்தையும் த்வேஷத்தையும் போக்கடித்து, தியானத்துக்கு விரோதமானவைக ளொன்று மில்லாத விடத்திலிருந்து, அதிகமாய் புசியாமல், புசியாமலுமிராமல், தியானத்துக்கு வழிப்படும்படி மனோவாக்காயங்களின் செயலைத்திருத்திக்கொண்டு, இப்படியெல்லாமிருந்து தினந்தோறும் தியானயோகத்தினின்றவன், தான் தியானம்பண்ணுகிற தத்துவத்தைத்தவிர மற்றவைகளில் தோஷத்தை நிரூபித்து அவைகளில் வைராக்கியத்தை வளர்த்துக்கொண்டு, தேஹமே ஆத்மாவென்கிற வபிமானத்தையும் அதுவளருவதற்குக்காரணமான வாஸனையின் பலத்தையும் அதற்கு நிமித்தமான கொழுப்பையும் காமத்தையும் கோபத்தையும் பிடிப்பையும்விட்டு, தனதல்லாத வெல்லாவற்றிலும் தனதென்கிற வெண்ணத்தைமாற்றி, ஆத்மாநுபவமே சுகமென்றிருந்தவனாய் ஸகல பந்தத்திலும் விடுபட்டு ஆத்மாவைஉள்ளது உள்ளபடியே அநுபவிப்பான்.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿।
𑌸𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌪𑌰𑌾𑌮𑍍॥ ௫௪॥

(௫௪) அளவற்ற ஞானமே வடிவாய் நமக்காட்பட்டிருப்பதே ஸ்வபாவமாயிருக்கிற ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் பிரகாசிக்கப்பெற்றவன், இலேசமான கருமாதிகளால் கலங்கவாவது நம்மை யொழிந்த மற்றொன்றையும் நினைத்து சோகப்படவாவது அது தனக்கு வேண்டுமென்று கோரவாவது மாட்டான்; மற்றப்படி நம்மைத்தவிர மற்றெல்லாப்பிராணிகளையும் ஒரேமாதிரியாய் திருணம்போலெண்ணி, ஸர்வேசுவரனையும் ஸகல ஜகத்துக்கும் உற்பத்தி ஸ்திதிலயங்களை லீலையாய்ச்செய்பவனையும் யாதொரு தோஷமும்மணமாத்திரமுமில்லாமலிருப்பவனையும் எல்லையில்லாவதிசயம்பொருந்தி எண்ணிக்கையற்ற கல்யாணகுணங்களுக்கு முக்கியஸ்தாநமாயும், லாவண்ணியமென்னும் அமுதத்துக்குக்கடலாயும் ஸ்ரீமானையும் புண்டரீகாக்ஷனையும் தனக்குநாதனையுமிருக்கிற நம்மிடத்தில்தானே மிகுந்த பக்தியுண்டாகப்பெறுவான்.

(அ - கை.) அதற்குப்பயன் அருளிச்செய்கிறார்.

𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌮𑌾𑌮𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌯𑌾𑌵𑌾𑌨𑍍𑌯𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃।
𑌤𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌶𑌤𑍇 𑌤𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍॥ ௫௫॥

(௫௫) ஸ்வரூபத்தாலும் ஸ்வபாவத்தாலும் நம்மை இன்னானென்றும், குணத்தாலும் விபூதியாலும் நாம் இவ்வளவென்றும் கீழ்ச்சொன்ன பக்தியைக்கொண்டுதான் நம்மை உள்ளபடியே அறியவேண்டும். அப்படி யறிந்தால் பின்பு பக்தி விருத்தியடைந்து அதனால் நம்மையறியக்கூடும் [என்றால்- 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 𑌶𑌕𑍍𑌯𑌃 என்று கீழ்ச்சொன்னபடி. எம்பெருமானை உள்ளபடியே யறிகைக்கு பக்திதான் காரணமென்று திருவுள்ளம்.]

(அ - கை.) இவ்வாறு வருணாச்சிரமங்களுக்கு உசிதமான நித்திய நைமித்திககருமங்களைப் பலாபேக்ஷையின்றி பகவத் ஆராதநரூபமாய்ப் பண்ணுமிடத்து அவைகள் பக்குவமாகும்படி சொல்லிற்று. இப்பொழுது காம்மியகருமங்களும் கீழ்ச்சொல்லியபடி யநுஷ்டிக்கப்படுமாகில் அப்படியே பலிக்குமென்கிறது.

𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌪𑌿 𑌸𑌦𑌾 𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣𑍋 𑌮𑌦𑍍𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌃।
𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌦𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 𑌪𑌦𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍॥௫௬॥

(௫௬) அர்ச்சுந! நித்திய நைமித்திககருமங்களை மாத்திரமல்ல; காம்மியங்களான மற்ற கருமங்களையும் நமது ஆராதனரூபமாகச் செய்துவந்தானாகில் நமது அநுக்கிரஹத்தாலே சாசுவதமான பதத்தைச் சிறிதுங்குறையின்றி யடைவான். [அதாவது நம்மை யடைவனென்றபடி.]

𑌚𑍇𑌤𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌯𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌤𑍍𑌪𑌰𑌃।
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌭𑌵॥௫௭॥

(௫௭) ஆகையாலே அர்ச்சுந! உன்னை நம்முடையவனென்றும் நம்மாலாளப்படுமவனென்றும் அறிகின்ற மனதைக்கொண்டு ஸகல கர்மங்களையும் (அந்தந்த கருமத்தா லாராதிக்கப்படுந் தேவதைகளோடுசேர்த்து) நம்மிடத்தில் ஸமர்ப்பித்து, நம்மையே பேறாக வநுஸந்தித்துக்கருமங்களைச் செய்துகொண்டு, இவ்வித புத்தியோடுகூடி எப்பொழுதும் நம்மையே சிந்தித்திரு.

𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑍁𑌰𑍍𑌗𑌾𑌣𑌿 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿।

(௫௭௨) இப்படி நம்மைச் சிந்தித்தபடியே ஸகல கருமங்களையுஞ் செய்துவந்தாயாகில் ஸம்ஸாரத்தால் வரும் ஸகல பாபங்களையும் நம்முடைய அநுக்கிரஹத்தாலேயே தாண்டிவிடுவாய்.

𑌅𑌥 𑌚𑍇𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌹𑌂𑌕𑌾𑌰𑌾𑌨𑍍𑌨 𑌶𑍍𑌰𑍋𑌷𑍍𑌯𑌸𑌿 𑌵𑌿𑌨𑌂𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑌿॥௫௮॥

(௫௮) அப்படியின்றி நீ அஹங்காரத்தால் நானே கிருத்தியாகிருத்தியங்களெல்லாவற்றையும் அறியவல்லேனென்கிற வெண்ணத்தால் நாம் சொன்னதைக் கேளாயாகில் அழிந்துபோவாய். [ஏனெனில், தம்மைத்தவிர எவனும் பிராணிகளின் கிருத்தியாகிருத்தியங்களை அறிபவனாவது அவைகளை ஆள்பவனாவது கிடையாதென்று திருவுள்ளம்.]

𑌯𑌦𑌹𑌂𑌕𑌾𑌰𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌨 𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇।
𑌮𑌿𑌥𑍍𑌯𑍈𑌷 𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌸𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿॥௫௯॥

(௫௯) அர்ச்சுந! உன்னுடைய நன்மை தீமைகளைப்பற்றி உனக்கே அறிந்து கொள்ளும்படியான ஸாமர்த்தியமிருப்பதாக அஹங்கரித்துக்கொண்டு இதுவரையில் நாம் சொன்ன விஷயங்களைக் கைநெகிழவிட்டு 'யுத்தம் செய்யாமலிருப்போ' மென்றிருந்தாயாகில், அப்பொழுது நீ கொண்டிருக்கிற அந்த சுதந்திரநிச்சயம் பொய்யே முடியும். ஏன்? நமது சுதந்திரத்தைப்

பொறுக்கமாட்டாது அக்ஞாநியான உன்னைப் பிரகிருதியானது யுத்தஞ் செய்யும்படி ஏவப்போகிறது?

(அ-கை.) அதையே உபபாதிக்கிறார்.

ஸ்வபாவஜேந கௌந்தேய நிபத்த⁴ஸ்ஸ்வேந கர்மணா|

கர்த்தும் நேச்சஸி யந்மோஹாத் கரிஷ்யஸ்யவஶோऽபி தத்|| கூ0||

(கூ0) இப்பொழுது அக்ஞாநத்தால் நீசெய்யமாட்டேனென்கிற இந்த யுத்தத்தையே, உனது க்ஷத்திரியஜாதிக்கேற்ற சௌரியத்தால் கட்டுப்பட்டவனாய்க்கொண்டு பிறர் செய்யும் உபத்திரவத்துக் காற்றாதவனாய் நீயே உன்னையு மறியாமல் செய்யப்போகிறாய்.

(அ-கை.) ஏனெனில், ஸகலப் பிராணிஸமூஹமும் ஸர்வேசுவரனால் தம்மால் பூர்வகருமத்துக்குத்தக்கபடி பிரகிருதியைப் பின் செல்லும்படி நியமிக்கப்பட்டிருக்கிறது; அதைச் சொல்லுகிறேன் கேள்.

ஈஶ்வரஸ்ஸர்வபூ⁴தாநாம் ஹ்ருத்³தே³ஶேऽர்ஜுந திஷ்ட²தி|

ப்⁴ராமயந்ஸர்வபூ⁴தாநி யந்த்ராரூடா⁴நி மாயயா|| கூக||

(கூக) ஸகலப்பிராணிகளையும் ஆள்வதே ஸ்வபாவனான வாசுதேவன், (பிரவிருத்தி நிவிருத்திகளெல்லாவற்றிற்கும் காரணமான ஞாநமுண்டாவதற்கு இடமான) ஹிருதயப்பிரதேசத்தில் இருக்கிறான். எப்படி? என்ன செய்துகொண்டிருக்கிறான்? தன்னால் நியமிக்கப்பட்டு (தேஹமாயும் இந்திரியமாயும் விகாரப்பட்டிருக்கின்ற)ப் பிரகிருதியென்னும் யந்திரத்திலேறியிருக்கின்ற ஸகல பூதங்களையும் குணமயமான தன் மாயையைக்கொண்டு அந்தந்த குணத்துக்குத்தக்கபடிப் பிரவ்ருத்திப்பித்துக்கொண்டிருக்கிறான்.

[இவ்வர்த்தம் ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்தஸ்ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச| என்றும் மத்தஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே என்றுஞ் சொல்லப்பட்டது. யஆத்மநி திஷ்ட²ந் இத்தியாதி சுருதியுமுண்டு.

(அ-கை.) இந்த மாயை நிவர்த்திப்பதற்குக் காரணங் கூறுகின்றார்.

தமேவ ஶரணம் க³ச்ச² ஸர்வபா⁴வேந பா⁴ரத|

தத்ப்ரஸாதா³த்பராம் ஶாந்திம் ஸ்தா²நம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்|| கூஉ||

(கூஉ) ஆகையாலே பாரத! ஸகலப்பிராணிகளையும் ஆள்பவனாய் ஆஸ்ரிதனிடத்திலுண்டான வன்பினால் உன்னுடைய தேர்த்தட்டில் ஸாரத்தியம் பண்ணுவானாயிருந்து இப்படி செய்யென்று நியமிக்கின்றான் யாவன், அவனையே ஸர்வவிதத்தாலும் சரணமாகப்பற்று. [என்றால்-அவன் நியமனத்தை நீ மேற்கொள்ளாமற்போனாலும் அவனுடைய மாயையாலேவப்பட்டவனாய்க் கொண்டு நீ யுத்தஞ்செய்யவே போகிறாய்; அப்பொழுது அழிந்துபோவாய்; ஆகையால் அவன் சொன்னபடியே யுத்தம் முதலியவைகளைச் செய்யென்றப

டி.] அப்படிச்செய்தாயாகில் அவனுடைய அநுக்கிரகத்தால் ஸர்வகர்மங்களு மற்று உத்தமஸ்தாநமான * பரமபதத்தையடைவாய்.

இதி தே ஜ்ஞாநமாக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா|
விம்ருஶ்யைததஶேஷேண யதேச்சஸி ததா குரு||௬௩||

(௬௩) இந்தப்பிரகாரம் மோக்ஷார்த்திகளுக்கு வேண்டுமதாய், கர்மயோகவிஷயமாயும் ஞாநயோகவிஷயமாயும் பக்தியோகவிஷயமாயு மறிய வேண்டியதாய், ரஹஸ்யார்த்தங்க ளெல்லாவற்றிற்கும் மேலாயிருக்கின்ற வெல்லா ஞாநங்களையும் உனக்கு உபதேசித்தேன். இவை யெல்லாவற்றையும் ஆலோசித்து உன் அதிகாரத்துக்குத்தக்கபடி இவற்றுள் எதை விரும்புகிறாயோ அதைச்செய்.

ஸர்வகுஹ்யதமம் பூய: ஶ்ருணு மே பரமம் வச:|
இஷ்டோ(அ)ஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம்||௬௪||

(௬௪) இந்த ரஹஸ்யார்த்தங்களெல்லாவற்றுள்ளும் பக்தியோகம் அத்தியந்தம் சிரேஷ்டமென்று $ முன்பே சொல்லப்பட்டது; மறுபடியும் அவ்விஷயமாகவே சிறந்ததொருவார்த்தை சொல்லுகிறோம் கேள். நீ மிகவும் இஷ்டனுகையாலே உனக்கு இதம் சொல்லுகிறோம்.

மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு|
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோ(அ)ஸி மே|| ||

(௬௫) நம்மிடத்தில் மிகவும் பிரீதிமாறுய்க்கொண்டு, மிகவும்பிரீதிருபமாயிருக்கிற § ஸ்மிருதி பரம்பரையைச்செய்; அப்படியே மிகவும் பிரியமான நம் †ஆராதநமே பொழுதுபோக்காயிரு; நம்மையே மிகவும் பிரீதியோடு வண

* தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய: தே ஹ நாகம் மஹிமாந: ஸசந்தே யத்ர பூர்வே ஸாத்யா: ஸந்தி தேவா: என்றும், யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:| என்றும், பரேண நாகம் நிஹிதம் குஹாயாம் என்றும், யோ(அ)ஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமந் என்றும், க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே என்றும், ஸோ(அ)த்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம் என்றும், இத்தியாதிகளி லோதப்பட்ட பரமபதத்தையென்றபடி.

$ முன்பே—இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே என்கிற விடத்தில்.

§ வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் என்றும் ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி நாந்ய: பந்தா வித்யதே(அ)யநாய என்றும் இத்தியாதிகளிற் சொல்லப்பட்ட வேதநம் தியாநம், உபாஸநம் முதலிய சொற்களுக்குப் பொருளாய், தரிசநத்துக்குஸமாநமாயிருக்கும் மிகுந்த பிரீதிருபமாயிருக்கிற ஸ்மிருதிபரம்பரையைச் சொல்லுகிறது.

† ஆராதநமாவது - பரிபூர்ணசேஷவிருத்தி.

ங்கு; இப்படியிருக்கும் நீ நம்மையே அடைவாய்; இவை யெல்லாவிஷயத்தி லும் நாம் உனக்குப் பிரதிக்ஞை பண்ணிக்கொடுக்கிறோம். [ஸாதாரணமாய் ஏதோ உனக்கு இஷ்டமாயிருக்கும்படி சிலவற்றைச் சொல்வதாக நினையாதே கொள்.] எனெனில் நீ நமக்குப்பிரியனன்றோ? [எவனுக்கு நம்மிடத்தில் மிகுந்தப் பிரீதியிருக்குமோ நமக்கும் அவனிடத்தில் மிகுந்தப்பிரீதி யுண்டாகுமாகையால் நாம் அவனைப் பிரியமாட்டாமல் அவனை நம்மோடு சேர்த்துக்கொள்ளுகிறோம்] ஆகையால் நம்மையே யடைவாய் என்கிற பிரதிக்ஞை ஸத்தியம்.

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ|
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:|| சுசு ||

(சுசு) கர்மயோகம் ஞானயோகம் பக்தியோகம் என்கிற மோக்ஷஸாதநங்களான வெல்லாத்தருமங்களையும் நம்முடைய ஆராதநரூபமாக மிகுந்தப் பிரீதியோடு உன் அதிகாரத்துக்குத்தக்கபடி செய்துகொண்டே, கீழ்ச்சொன்னபடி பலனையும் கர்மத்தையும் கர்த்திருத்வத்தையும் * விட்டு ஆராத்ய ஸ்வருபனான நம்மையே பலனாகவும் உபாயமாகவும் நினைக்கக் கடவாய். இப்படி யிருக்கின்ற உன்னை நம்மையடைதற்கு விரோதிகளாய் அநாதிகாலமாய் ஸம்பாதிக்கப்பட்டவைகளாய் (செய்யத்தகாததைச் செய்கையும் செய்யத்தக்கதைச்செய்யாமையுமான) ஸகலபாபங்களினின்றும் விடுவிக்கிறோம். ஆகையால் சோகியாதேகொள்.

இந்த சுலோகத்துக்கு மற்றெருபடி வியாக்கியாநம்.

[அ-கை.) ஸகலபாபங்களினின்றும் விடுபட்டு எம்பெருமானுக்கு மிகவுமினியனாயிருக்கிற புருஷனுக்கே பக்தியுண்டாகுமாகையாலே அந்த பக்தியை யாரம்பிக்கவொட்டாமல் விரோதிக்கின்ற பாபம் அளவற்றிருக்கையாலே, அவைகளை யொழிக்கும் பிராயச்சித்தங்களான தருமங்களை யெத்தனைகாலம் அநுஷ்டித்தாலும் ஒழிப்பதரிதாகையாலே, அர்ச்சுநன் தனக்கு பக்தியோகத்தை யாரம்பிக்கும்படியான யோக்கியதை யில்லையென்று நினைத்துச் சோகிக்க, அந்த சோகத்தைப் போக்குவாராக வருளிச்செய்கிறார்.

பக்தியோகத்தை யாரம்பிக்கவொட்டாமல் விரோதிக்குமவைகளாய் அநாதிகாலமாய் ஸம்பாதிக்கப்பட்டவைகளாய் நாநாவிதங்களாய் அநந்தங்களாயுள்ள பாபங்களுக்குத் தக்கப்பிராயச்சித்தருபங்களாயும், கிருச்சிரம், சாந்திராயணம், கூச்மாண்டம், வைச்சுவாநரம், வ்ராதபவித்திரேஷ்டி, த்ரிவ்ரு

* ஸர்வதருமங்களையும் சாஸ்திரோக்தமாய் விடுவதென்பது இது தானென்று நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம| த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவிதஸ் ஸம்ப்ரகீர்த்தித: என்று தொடங்கி, ஸங்கம் த்யக்த்வா பலஞ்சைவ ஸ த்யாகஸ் ஸாத்த்விகோ மத: | நஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத:| யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே என்று அத்தியாயத்தின் ஆரம்பத்தில் மிகவும் திடமாய் உபபாதிக்கப்பட்டது.

தக்நிஷ்டோமம் தொடங்கி நாநாவிதங்களாயும், அநந்தங்களாயும், எத்தனை காலம் ஜீவித்திருந்து அநுஷ்டித்தாலும் அநுட்டிக்கவரியவைகளாயுமிருக்கின்ற ஸர்வதருமங்களையும் விட்டு, பக்தியோகாரம்பம் ஸித்திப்பதற்காக, பரமகாருணிகனாய் பிராணிகளிடத்தில் ஒருவிசேஷத்தையும் ஆலோசியாமல் அவைகளுக்கெல்லாம்சரணியனாய் ஆச்சிரிதாளிடத்திலுண்டான வாத்ஸல்லியத்துக்குக் கடலாயிருக்கின்ற நம்மையே சரணமாகப்பற்று. நாம் உன்னைக் கீழ்ச்சொன்ன பக்தியோகாரம்பத்துக்குவிரோதிகளான பாபங்களினின்றும் விடுவிக்கிறோம். நீ அதற்காகச்சோகிக்கவேண்டாம்.]

𑌇𑌦𑌂 𑌤𑍇 𑌨𑌾𑌤𑌪𑌸𑍍𑌕𑌾𑌯 𑌨𑌾𑌭𑌕𑍍𑌤𑌾𑌯 𑌕𑌦𑌾𑌚𑌨 ।
𑌨 𑌚𑌾𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌵𑍇 𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 𑌨 𑌚 𑌮𑌾𑌂 𑌯𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌤𑌿 ॥௬௭॥

(௬௭) இப்பொழுது உனக்கு நாம் சொன்ன பரமரஹஸ்யமான இவ்வர்த்தத்தை தவம் புரியாதவனுக்காவது, தவம்புரிந்தாலும் பக்தியில்லாதவனுக்காவது, பக்தியுண்டானாலும் சிரவணத்தில் இச்சையில்லாதவனுக்காவது நீ சொல்லக்கூடாது. அதிலும் நம் ஸ்வரூபத்தையும் நம் ஐசுவரியத்தையும் நம் குணங்களையும் சொல்லக்கேட்டு யாவனொருவன் அவைகளில் தோஷத்தையேறிடுகிறான் அவனுக்குச்சொல்வதென்பது சிறிதுங்கூடாது.

[மற்றப்படி அவனைக்கிட்டவும் சேரவொட்டாமலிருக்கவேண்டுமென்று திருவுள்ளம்].

𑌯 𑌇𑌮𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍍𑌵𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌤𑌿 ।
𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌮𑌯𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌤𑍍𑌯𑌸𑌂𑌶𑌯𑌃 ॥௬௮॥

(௬௮) மிகவும் ரஹஸ்யமான இவ்வர்த்தத்தை யாவனொருவன் நம் பக்தர்களிடத்தில் வியாக்கியானிக்கிறானோ அவன் நம்மிடத்தில் மிகுந்த பக்தியைச்செய்து நம்மையே யடைவான். இதில் ஸம்சயமில்லை.

𑌨 𑌚 𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁 𑌕𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌕𑍃𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌭𑌵𑌿𑌤𑌾 𑌨 𑌚 𑌮𑍇 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑌰𑍋 𑌭𑍁𑌵𑌿 ॥௬௯॥

(௬௯) மனுஷ்யகோடியில் இதுவரையில் அவனைப்போல் நமக்குப் பிரியஞ் செய்பவனொருவனுண்டாகவுமில்லை; இனியுண்டாகப்போகிறதுமில்லை.

[அயோக்கியர்களை முந்தி நிஷேதித்தது, இவ்வர்த்தத்தையோக்கியாளுக்கு சொல்லாமலிருப்பதைப்பார்க்க அவர்களுக்குச் சொல்வது மிகவும் அநிஷ்டமென்கைக்காக.]

𑌅𑌧𑍍𑌯𑍇𑌷𑍍𑌯𑌤𑍇 𑌚 𑌯 𑌇𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌾𑌵𑌯𑍋𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌤𑍇𑌨𑌾𑌹𑌮𑌿𑌷𑍍𑌟𑌃 𑌸𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌿𑌃 ॥௭௦॥

(௭௰) யாவனொருவன் நமமிருவருக்கும் நடந்த பரமதர்மமான இந்த ஸம்வாதத்தை அத்தியயநம்பண்ணுகிருனே, அவனால் இதில் சொன்ன ஞாநயோகத்தின்படி நாம் ஆராதிக்கப்பட்டோமாகிறோம்.

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑌨𑌸𑍂𑌯𑌶𑍍𑌚 𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌦𑌪𑌿 𑌯𑍋 𑌨𑌰𑌃 ।
𑌸𑍋𑌽𑌪𑌿 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌶𑍁𑌭𑌾𑌁𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍 ॥

(௭௧) சிரத்தையோடுகூடி அஸூயையின்றி யாவனொருவன் கேட்கிருனே அவனும் அப்படி கேட்டமாத்திரத்தினாலே பக்தி விரோதிபாபங்களினின்றும் விடுபட்டு புண்ணியகர்மாக்களான நம் பக்தஜநஸமூஹத்தில் வந்து சேருவான்.

𑌕𑌚𑍍𑌚𑌿𑌦𑍇𑌤𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌤𑍍𑌵𑌯𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌚𑍇𑌤𑌸𑌾 ।
𑌕𑌚𑍍𑌚𑌿𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌪𑍍𑌰𑌣𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑍇 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ॥௭௨॥

(௭௨) அஹோ பார்த்த! நாம் சொன்னதையெல்லாம் ஸாவதாநமாய்க் கேட்டாயே! இப்பொழுதாகிலும் யுத்தம் செய்யமாட்டேனென்று சொன்ன உனக்கு அந்த அக்ஞாநம் ஒழிந்ததா?

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 । 𑌨𑌷𑍍𑌟𑍋 𑌮𑍋𑌹𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌲𑌬𑍍𑌧𑌾 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑌯𑌾-
𑌚𑍍𑌯𑍁𑌤 । 𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌗𑌤𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇 𑌵𑌚𑌨𑌂 𑌤𑌵 ॥௭௩॥

(௭௩) அதற்கு அர்ஜுநன் விண்ணப்பஞ்செய்கிறான்—ஸ்வாமி! தேவரீருடைய கிருபையால் விபரீதஞாநம் ஒழிந்தது. யதார்த்தமான ஞாநமும் பிறந்தது. [என்றால்-தேஹாதிகளை ஆத்மாவென்கிற அபிமானமும், சேதநாசேதநரூபமான ஸகலப்பிரபஞ்சமும் பரமபுருஷனுக்குச் சரீரமென்கிற விஷயந்தெரியாமல் மாருக நினைத்திருந்த அபிமானமும், நித்தியநைமித்திகமான கர்மம் பரமபுருஷனுடைய ஆராதநரூபமாக அநுஷ்டிக்கப்படுமாகில் அவனை யடைவதற்கு உபாயமாகுமென்கிற விஷயந்தெரியாமல் அதைக்கட்டுக்குடாக நினைத்திருந்த அக்ஞாநமும் தொலைந்தன. ஆத்மா பிரகிருதிக்கு வேருய் பிரகிருதியின் ஸ்வபாவமின்றி அறிவே ஸ்வபாவமாய் பரமபுருஷனுக்குச் சேஷப்பட்டு அவனாலாளப்படுவதே ஸ்வரூபமாயிருக்கிறதென்கிற ஞாநமும், ஸகலஜகத்திற்கும் உத்பத்திஸ்திதி லயங்களை லீலையாய்ச்செய்பவனாய் ஸகலதோஷங்களுக்கு எதிரான கல்யாணமேஸ்வரூபனாய் (ஸ்வபாவஸித்தங்களும் அளவற்ற அதிசயம்பொருந்தியவைகளுமான) ஞாநம் பலம் ஐசுவரியம் வீரியம் சக்தி தேஜஸ்ஸு முதலிய ஸமஸ்த கல்யாணகுணங்களுக்கும் பெருங்கடலாய் பரப்பிரம்மமென்னுஞ் சொல்லுக்குப்பொருளாயிருக்கிற பரமபுருஷனுடைய உண்மையை அறியும்படியான ஞாநமும், இப்படி பராவரதத்துவங்களை யுள்ளபடியே யறிந்து பிறகு அதை அப்பியஸித்துவந்து பரமபுருஷனுக்கு நாளுக்குநாள் பிரீதியை வளர்ப்பதேபயனுக நித்திய நைமித்திககர்மங்களை யநுஷ்டிப்பதாலும் நிஷித்தங்களை ஒழிப்பதாலும் சமம் தமம் முதலிய ஆத்மகுணங்களாலும் பெறவேண்டியதான (பக்திரூபமாய்ப் பரிண

மித்திருக்கிற) பரமபுருஷோபாஸநத்தால் மாத்திரம் அடையப்படும் பொருளும் வேதாந்த விழுப்பொருளும் பரமபுருஷனுமான வாசுதேவன் தேவரீரே யென்கிற ஞாநமும் அடியேனுக்குண்டாயிற்றென்றபடி.]

இப்படி ஞாநம்பிறந்தபின்பு பந்துக்களிடத்தில் ஸ்நேகத்தாலும் கருணையாலும் மென்மேலும் விருத்தியடைந்த விபரீதக்ஞாநமடியாகவரும் ஸகல துக்கங்களினின்றும் விடுபட்டவனாய் ஸந்தேஹமற்று ஸ்வஸ்த்தனாயிருக்கிறேன். இனி யுத்தஞ்செய்யும்படியாகத் தேவரீர்அருளிச்செய்த திவ்யஸூக்தியை யப்படியே செய்கிறேன்; என்று விண்ணப்பம் செய்தான்.

(அ - கை.) தன்புத்திரர்களும் பாண்டவர்களும் யுத்தத்தில் என்ன செய்கின்றார்களென்று கேட்ட திருதராஷ்டிரனைப்பார்த்து ஸஞ்சயன்சொல்லுகிறான்.

𑌸𑌞𑍍𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 ॥ 𑌇𑌤𑍍𑌯𑌹𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌿𑌮𑌮𑌶𑍍𑌰𑍌𑌷𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌣𑌮𑍍 ॥ ௭௪ ॥

(௭௪) அஹோராஜந்! இந்தப்பிரகாரம் வசுதேவன் மைந்தனான கண்ணனுக்கும் அவர் அத்தைமகனாய் மகாபுத்திசாலியாய் அவர் திருவடிகளை யாஸ்ரயித்த அர்ச்சுநனுக்கும் நடந்த அற்புதமான ஸம்வாதத்தை மயிர்க்கூச்செழும்படியாகக் கீழ்ச்சொன்ன வண்ணமெல்லாங் கேட்டேன்.

𑌵𑍍𑌯𑌾𑌸𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌵𑌾𑌨𑍇𑌤𑌦𑍍𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑌹𑌂 𑌪𑌰𑌮𑍍 ।
𑌯𑍋𑌗𑌂 𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌤𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌕𑌥𑌯𑌤𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍 ॥ ௭௫ ॥

(௭௫) வியாஸமஹரிஷியின் அநுக்கிரஹத்தால் திவ்யமான கண்ணும் காதும் பெற்றவனாகையாலே இந்த யோகமென்னும் மேலானரஹஸ்யத்தை ஞாநபலாதிகளுக்கெல்லாம் நிதியான ஸ்ரீ கிருஷ்ணபகவான் தாமேயருளிச்செய்யக்கேட்டேன்.

𑌰𑌾𑌜𑌨𑍍𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌿𑌮𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌮𑍍 ।
𑌕𑍇𑌶𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌯𑍋𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌹𑍃𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌚 𑌮𑍁𑌹𑍁𑌰𑍍𑌮𑍁𑌹𑍁𑌃 ॥

(௭௬) கேசவனுக்கும் அர்ச்சுநனுக்கும் நடந்த புண்ணியமான இவ்வற்புத ஸம்வாதத்தை நான் நேரே கேட்கவே, அது முதற்கொண்டு எனக்கு நினைக்கநினைக்க ஸந்தோஷமுள்ளடங்காமல்வருகின்றது.

𑌤𑌚𑍍𑌚 𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 𑌰𑍂𑌪𑌮𑌤𑍍𑌯𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌹𑌰𑍇𑌃 ।
𑌵𑌿𑌸𑍍𑌮𑌯𑍋 𑌮𑍇 𑌮𑌹𑌾𑌨𑍍𑌰𑌾𑌜𑌨𑍍𑌹𑍃𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌚 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 ॥ ௭௭ ॥

(௭௭) அதுவுமின்றி அர்ச்சுநனுக்குப் பிரகாசிப்பித்தருளின ஸ்ரீமந்நாராயணனுடைய அத்புதமான ரூபத்தையும் பிரத்தியக்ஷமாய்க்கண்டனுபவித்தேன். அதை அப்படியே நினைத்து நினைத்து ஸந்தோஷிக்கின்றவெனக்கு மிகவும் ஆச்சரியமுண்டாகின்றது.

(அ-கை.) இவ்விஷயத்தில் ஆயிரம் வார்த்தை யென்ன?

யத்ர யோகேஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தநுர்த்தர: |
தத்ர ஶ்ரீர்விஜயோ பூதிர்த்ருவா நீதிர்மதிர்மம ||௭௮||

(எஅ) உயர்வும் தாழ்வுமாயிருக்கிற சேதநாசேதநங்களெல்லாவற்றிற்கும் எந்தெந்த ஸ்வபாவங்களுண்டோ அவைகளுக்கெல்லாம் நியாமகனாய், தம்மையொழிந்த வெல்லாவஸ்துக்களுக்கும் ஸ்வரூபம் ஸ்திதி ப்ரவிருத்தி முதலிய வெல்லாம் தம்ஸங்கல்பாதீனமா யிருக்கும்படி விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவான் எழுந்தருளியிருக்கிற விடத்திலும், அவன் திருவடிகளையே நம்பியிருக்கின்ற கையும்வில்லுமான வர்ச்சுநன் எங்கே விளங்குகிறானோ அவ்விடத்துந்தான் லக்ஷ்மியும் விஜயமும் செல்வமும் சாசுவதமாயிருக்குமென்பது என்னுடைய ஸித்தாந்தம்.

ஓம் தத்ஸதிதி ஶ்ரீமஹாபாரதே
ஶதஸாஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் வையாஸிக்யாம்
ஶ்ரீபீஷ்மபர்வணி ஶ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவி
த்யாயாம் யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே ஸந்ந்யா
ஸயோகோ நாமாஷ்டா
தஶோத்யாய:.

ஜயதி ஸகலவித்யாவாஹிநீஜந்மஶைலோ ஜநிபதவநிவ்ருத்
திஶ்ராந்தவிஶ்ராந்திஶாகீ | நிகிலகுமதிமாயாஶர்வரீபாலஸந்த்
யா நிகமஜலதிவேலாபூர்ணசந்த்ரோ யதீந்த்ர: ||

ஶ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

---

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

பதினெட்டாவது அத்தியாயம் - முற்றிற்று.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

## ஸ்ரீபகவத்கீதாசாஸ்திரம்

